# GUIDE TO ÄSÄN.

# ஆசானாற்றுப்படை.

BY

R. VENKATACHALAM PILLAI

OF

MOKANUR

EDITED BY

V. RADHAKRISHNAN B. A.,

*Karanthattangudi.*



Tanjore

G. S. MANIYA & CO

1910

[illegible]

# EDITORIAL NOTE.

I am profoundly grateful to my friend the author for allowing me to publish this excellent little poem. It is written in one of the oldest forms of poetic composition called *attupadai* which under the pretence of guiding a needy minstrel to the generous bounty of a benevolent prince takes occasion to make a flattering description of his kingdom and virtue. Our author has taken the cue from NAKKERAR in making a figurative use of such a composition and has offered a fitting tribute to the virtuous qualities and high attainments of his Äsän **Pandit. R. Subramaniya Aiyar** of St. Peter's High School, Tanjore.

The young author has successfully imitated the chaste diction of our dear old classics and his "Guide to Äsän" may well boast of such qualities as simplicity of expression, richness of imagery, and finish of style which characterise the ancient Tamil Literature—the immutable monument of Tamilian wisdom and glory.

It is hoped that this will arouse an ardent desire in the minds of our youthful scholars to emulate the author and thus bring in an era of brilliant literary activity in the Tamil world.

I doubly value this work both as a highly wrought literary piece and as expressive of the love and veneratian I feel for Mr. Aiyar whose pupil I am proud to be.

A glossary containing the meaning of difficult words together with the prose-order of the poem is appended for the help of the juvenile readers.

KARANTHATTANGUDI
7TH OCTOBER 1910.
V. RADHAKRISHNAN.



# ஆசானாற்றுப்படை

## கடவுள் வாழ்த்து.

ஊக்குவ தவன்முதல் வேட்பதுந் தன்னிறை !

ஆங்குங்,

கைவிரித் தைஇய மெய்யே யொன்றிலே
னாற்றி யெனவல் லாந்திடு மஃதான்
றுலகம் பல்வகைத் தூக்கிய தென்னெனின்
வாயுரை யன்றிக் கைகோளுங் குறியாய்க்
காலிரண் டேற்கவெக் காலு முனதெனும்
பாய்திணை ஞாலத்துப் பன்மதத் தோனே.

# நூல்

---

முந்நீர்ப் பௌவத் திருந்திரை பெயர்த்து
அகலிரு விசும்பிற் பகலற வளைஇ
நள்ளிருட் கங்குல் வெள்ளுடுப் புதைவான்
'தூஉ யன்ன துவலை துவற்றலின்
றேஎந் தேறுத்' தெருமரல் கலிப்ப
நோக்குநுழை கல்லா நுணங்கரிற் கானம்
போக்கதர் செத்துப் புரையா ரியவிடைச்
சில்லூண் மிசைந்து பல்பகல் கடந்தென
நேர்தபு கடும்பொறைப் பொதிசால் புறத்த
நடைமெலிந் துணங்கிய விடைபல துரக்கும்
புலம்புடை யொருவன் போன்மென நெஞ்சே!
குலங்குணஞ் சான்ற புலவோ னசைஇ
மடநல் குரவிற் றளர்ந்தனை மாதிரம்
பலபல் காலிற் படர்ந்தனை படர்ந்து
மணங்கினை கையற் றுங்காங் கிலரென
நுரைலகை யேந்துபு விழுதுதேர் கல்லாக்
கடையோர் கடுப்பக் காட்சிமன் கிழத்தலின்
நின்னுள் வதியுநர் நீகாண் கிலையெனி
னன்னோர்ப் பெறுமா ணமையுநல் லிடங்களு
மிடந்தொறுந் தொழிலுந் தொழிறொறுஞ் சால்பு
முருவுந் திருவுங் குலனொடு பிறவுஞ்
சேஎ யன்ன வாய்படு தீஞ்சொலுங்
குணனொடு நிகர்த்துக் கூறுவல் கேண்மதி!

றண்டமிழ் மொழியே தருக்கம் வடமொழி
யாங்கிலத் தொடுபிற நீங்கில நூல்நிறை
நூழையொன் றில்லாப் பேழையென் மனனுந்
தவம்பலித் தென்னத் தழீஇய வடியேம்
பவக்கடல் கடத்தலிற் பழிச்சு நாவாயும்
பெய்வான் கடல்படி கையொடுஞ் சான்ற
இன்னநல் லுருவிற் பொன்னியன் றன்று
றிருள்கெடுத் தியக்கிய பொருள்பெற் றெனினும்
யாணர்நின் றறியாக் காண்வரு திருவினர்
நீதி வழுவா நெறியிட் டுயர்ந்த
வாறறி மரபி னருமறைக் குலத்தோர்
பதிபசுக் கலாம்விளை பாசடை மாக்களை
மதியா மதியர் மாசறு காட்சியர்
வெல்லுவ தில்லெனச் சொல்லிய குயின்மொழி
வேனிற் பருவம் வெயினுழை கல்லாத்
தேன்படு சோலைத் திரண்மணற் பந்தர்
கான்யாற் றிடைச்சிறு கால்பெற் றெனவு
முத்தமி ழறிஞர் முழுமதிக் குடிபுகு
மடியார்க் குநல்லா ரவர்;பயன் காண
முடியார்க் குநல்லா ரிவர்மற் றெனவும்
புலம்பூத் தொளிருமிப் புவிகொண் டெஞ்சிய
கலம்படு புகழி னலம்பல விழைத்தவர்
நச்சினார்க் கினியர் ; அச்சுவரு களத்து
நச்சார்க் குமினிய ரிவரோ வெனவுங்
கடுகைத் துளைத்துட் கடலே ழளித்தோர்
பரிமே லழகர் ; பணித்த பன்மதமாங்
கரிமே லழக ரெனவுங் கவினுடைக்

௧௦௫ குளிர்ந்த சொல்லினர் குணமொன் றில்லாக்
குணங்குண மாக்கொள் குரிசினன் செய்யார்
வையைச் சுப்பிர மணிய
ஐயரென் நாமத் தருட் கிழவோரே.

---

நீயேயெனப்பலர் நெஞ்சமுஞ்சூழ்தர நின்னிலெனத்
தாயேபிடித்துத் தளையிட்டமர்த்திய தண்ணருளர்
மாயேனெனும்பெரு மாயையிரும்பணி மல்கிற்றெனிற்
போயேயறிதியப் பொன்னையெற்காண்டலிற்
[புள்ளினையே.

முடிந்தது.



# அரும்பதவிளக்கம

---

## கடவுள் வாழ்த்து.

---

யாவையுஞ் செய்யவூக்குவோன் கடவுளாகலின் முழுதூஉந்தன்னையே நுதலுவித்தலுமாமாகவும், வாழ்த்துக்கூறிச் செல்லலினுமமையும். அதுதானுங்கூறுது செல்லலினுமகிழும். ஏற்க ஈதலுமுளன்.

பன்மதத்தோன்— பலமதங்களுக்கும் இறையாவான்—அன்றி மும்மதயானை முகனுமாம்.

## நூல்.

௧. பெயர்த்து—வாரிக்கொண்டு
௨ பகலற—பகல் சென்றவுடன்
௫ தேம்—திசை.
,, தெருமால்—வருத்தம்.
௬ அரில்—பிணக்கம்.
௭ செத்து—கருதி.
௮ கடந்தென—கடந்ததாக
௯ பொறை— பாரம்.
௧௦ துரக்கும்—ஓட்டுகின்ற.
௧௧ புலம்பு—தனிமை, வருத்தம்.
௧௫ கையற்று—செயலற்று.
௧௬ நுரை—வெண்ணெய்.
,, இழுது—நெய்.

௧௭ காட்சி—அறிவு.

,, நிழத்தல்—இல்லையாக்குதல்.

௨௨ வாய்—உண்மை.

௨௩ நிகர்த்து—கலந்து.

௨௪ கழையென மருள்.

,, காழோர்—பரிக்கோற்காரர்.

௨௫ மாய்தல்—மறைதல்.

௩௧ அல்லங்காடி—அந்திக்கடை.

௩௩—௩௫ பரத்தையர் வீட்டிற்கும்புகையிரதச் சாலைக்கும் சிலேடை.

௩௫ வம்பமாக்கள்—புதியமாக்கள், வம்மை யுடையமாக்கள்.

௩௯ இலவந்திகை—ஒருவகைச்சோலை.

௪௧ இஞ்சி (மதில்) உடுவைத்தொட்ட ; விஞ்சி (அதிகமாக) உடுத் (அகழை) தொட்ட (தோண்டிய).

௪௨ மெய்ப்பை—சட்டை.

௪௩ கொண்மார்—கொள்ளும்படி.

,, தொடுவாரணலர்-கட்டியவாரினையுடைய தாவாயை யுடையவர்

௪௪ அணியிழை, அன்மொழித்தொகை

௪௭ கலித்து—செருக்கி.

௪௮ நெஞ்சுநிலை தொலைத்து—இல்லாதது நினைத்தல் அருமையென்றபடி.

௪௯ நனந்தலை—இடமகன்ற.

௫0 வடபாற்குணவயின்—வடகோடிக் கீழ் சரகில்.

ருய சுடுமஞ்ஞெங்கி—ஒடுவேய்ந்து,
ருஉ திறம்—கற்பு.
ருஎ—ருகூ. பேதுருகலாசாலைக்கும் (St. Peter's High School) பொன்னகருக்குஞ் சிலேடை.

சுங உழுசாலோதை — காளைப்பாட்டு; அதாவது முன்னேருழவன்பாடி முடிக்குந்தோறு மேனையார் ஒத்துக்குரலெழுப்புவது.

,, உகைத்தல்—எழுப்புதல்.
சுச உரன்—அறிவு.
சுசு தலைப்பெயல்—சென்று சேருதல்
சுஎ ஆறு இடையிலுற ஏற்றினைப்பார்க்கும் பிணையென்றவுவமம் 'அழலினிங்கான ஹுகா'னென்றமையுட்கொண்டு.

எங யருகல்—வழித்தோன்றல்.
அ0 நூழை—துவாரம்.
அஉ பழிச்சு—போற்றுகின்ற
,, நாவாய், உம்மைத் தொகை.
அங வான், கைக்கு நாணிக் கடலிற் படிந்ததென்க,

அரு இயக்கிய—பெற்ற
அசு யாணர்—புதுவருவாய்.
,, காண்வரு—அழகுவருகின்ற.

நெஞ்சே (கக) படரல் குரவிற்றளர்ந்து (கங) புலவோனசைஇ (கஉ) படர்ந்து (கச) இலரென்று (கரு) புலம்புடையொருவன் போன்மென (கக) அணங்கினை (கரு) நீகாண்கிலை யெனின் (கஅ) இடங்களும் (ககூ)

தொழிலுஞ் சால்பும் (௨௰) உருவுந் திருவுங் குலனொடு
பிறவும் (௨௧) சொல்லும் (௨௨) குணனொடு நிகர்த்துக்
கூறுவல் கேண்மதி (௨௩) கரந்தைக் (௨௬) கோயிலும்
(௨௭) கீழ்வாயிலும் (௩௨) புகையிரதச்சாலையும் (௩௬)
இலவந்திகைச்சோலையும் (௩௯) நாற்புறஞ்சூழும் (௪௰)
தஞ்சைமா நகர் (௪௧) அவண் (௪௧) வீதி (௪௬) பல (௪௭)
காப்பண் (௪௭) நாளங் காடி மறுகிடைத் (௪௬) திகழகம்
(௫௧) மனையுடனமர்ந்து (௫௨) அறந்துறவென்பார் (௫௫)
சொல்லிழுக்குறுமாத்தோன்றிய நீரால் (௫௬) அறஞ்
சூழ்சிறப்பினுங் கொங்காண்குவை (௫௩) பள்ளியில் (௬௰)
தமிழ்ப்புலம் விளைக்குந்தாளாண்மையர் (௬௪) (ஆண்டும்)
காண்குதி (௬௫) தலைப்பெய்யளவை (௬௬) ஏறுகாண்
பிணையின் (௬௭) நின்று தொழுமுன் (௬௮) விருப்பில்
(௭௰) அருளலோவிலரால் (௭௨) 'அவர்'! ஆண்டகை வள்
ளல் (௭௨) பொன்னியன் றன்னார் (௮௪) திருவினர் (௮௬)
குலத்தோர் (௮௮) சொல்லினர் (௯௫) குரிசில் (௯௬)
கிழவோரென்க.

